## மனப்பால்

"ஜா மணி" என்ற புனைபெயர் கொண்ட அன்பர் ராஜாமணி இப்போது சில வருஷங்களாக ஒரு சுயேச்சை எழுத்தாளராகவே இருந்து வருகிறார். இதற்குமுன் அவர் பல பத்திரிகைகளிலே உதவி ஆசிரியராகவும், துணை ஆசிரியராகவும், சிறிது காலம் ஆசிரியரா கவும் இருந்து வேலை செய்திருக்கிறார். இத்தனை பத்திரிகை களையும் விட்டு அவர் விலகியது, சம்பளம் பற்றாது என்ற காரணத்தினாலோ, அந்தந்த மாதச் சம்பளம் அடுத்தமாதக் கடைசிக்குள் கிடைக்கவில்லை என்ற காரணத்தினாலோ அல்ல. காரணம் வேறு. சுதந்திரம், அதாவது அபிப்பிராய சுதந்திரம் என்பது தான் அவரை ஒவ்வொரு காரியாலயத்திலிருந்தும் வெளி யேற்றிக் கொண்டிருந்தது. இப்போது அவருக்கு வேலை கொடுக்க எந்தக் காரியாலயமும் தயாராக இல்லை. அவருடைய இன்றைய சுயேச்சை அந்தஸ்து அல்லது சுதந்திர வாழ்க்கை அவராக விரும்பி மேற்கொண்டதல்ல; வலிய திணிக்கப்பட்ட ஒன்றுதான். அதனால் அவர் சுதந்திரத்திற்கே அடிமையாகும்படி நேர்ந்துவிட்டது. பணத் திற்கு அடிமையாகிறார்கள், பாசத்துக்கு அடிமையாகிறார்கள்; இன்னும் காதல் கத்தரிக்காய் போன்ற ஏதாவது ஒன்றுக்கு அடிமையா கிறார்கள்-இது உலகத்தில் சகஜமாக இருக்கிறது. அந்த அடிமைத் தனங்களுக்கு என்றாவது ஒரு நாள் உய்வு உண்டு. ஆனால் சுதந்திரத்திற்கே அடிமையாகிவிட்டால், அப்புறம் மனிதன் மீள்வ

தெங்கே? மீள முடியாமல் போனதற்காக ஜாமணி துன்பப் பட்டார்; ஆனால் கவலைப்படவில்லை. அதற்கு பதிலாகப் பெருமைப்படவே செய்தார். வறுமையில் செம்மை இருந்ததோ இல்லையோ, பெருமை இருந்தது!

ஜாமணி எக்காரணத்தை முன்னிட்டும் தம் சொந்த அபிப்பிராயத்தை விட்டுக் கொடுக்காதவர் என்பது எழுத்துலகில் பிரசித்தம். 'முயலுக்கு மூன்றுகால்' என்று எழுதிவிட்டால், அப்புறம் அவராகத் தவறைக் கண்டுபிடித்துத் திருத்தினால்தான் உண்டு. மற்றவர்கள் அதைச் சுட்டிக்காட்டி, 'நாலு கால் என்று திருத்தச் சொன்னால், அவர் ஒப்புக் கொள்ளவே மாட்டார். ஒப்புக் கொள்ளாததோடு மட்டுமல்ல; 'உம்மைப் போன்றவர்களுக்காகத் தான் புண்ணியத்துக்கு மூன்று கால் என்று எழுதி வைத்தேன். இல்லை யென்றால் இரண்டு கால் என்றே எழுதியிருப்பேன்" என்று அடித்துச் சொல்லவும் செய்வார். இப்படிப்பட்ட பேச்சையும் ரஸித்துக் கொண்டாடும் சில வாசக நேயர்களும் சில சக எழுத்தாளர்களும் தமிழன்னையின் மணி வயிற்றில் பிறந்திருப்பதால் தான், ஜாமணியின் எழுத்துக்களுக்கு இன்னும் ஓரளவாவது கிராக்கி இருந்துகொண்டு வருகிறது. அவருக்குப் பிடிக்காத புத்தகத்துக்கு - அப்படிச் சொல்வது சரியல்ல; அவருக்கு பிடிக்காத ஒருவர் எழுதிய புத்தகத்துக்கு - அவர் மதிப்புரை எழுதினாரென்றால், அந்தப் புத்தக ஆசிரியர் தூக்குப் போட்டுக் கொண்டு சாகவேண்டுமென்றும், புத்தகத்தை வெளியிட்டவர் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகவேண்டுமென்றும் நினைத்துக் கொண்டே கடுமையாகத் தாக்கி எழுதிவிடுவார். இதனால் நூலாசிரியர்களுக்கு அவர் ஒரு சிம்ம சொப்பனம் என்ற கீர்த்தியைச் சம்பாதித்து விட்டார். சில பத்திரிகை ஆசிரியர்கள், போட்டிப் பத்திரிகைகளின் ஆசிரியர்களின் எழுத்துக்களைத் தாக்க நினைத்தால் அந்தக் கைங்கரியத்தைச் செய்ய ஜாமணியையே பயன்படுத்திக் கொள்ளுவது வழக்கம்.

அதனால் மதிப்புரை எழுதுவதில் ஜாமணிக்கு மாதம் முப்பது ரூபாய்க்குக் குறையாமல் வருமானம் வந்து கொண்டிருந்தது. இதைத்தவிர ஏகதேசமாகக் கதை கட்டுரைகள் எழுதுவதில் கொஞ்சம் வரும். புத்தகங்களுக்காக ராயல்ட்டியையும், முன்பணத்தையும் வெளியீட்டாளர்களிடமிருந்து ஐந்தும் ஆறுமாக வாங்கி விடுவார். இத்தனை வருமானங்களையும், மதிப்புரைப் புத்தகங்கள், இலவசமாக வரும் பத்திரிகைகள் ஆகியவற்றை நிறுத்து விற்ற பணத்தையும் வைத்துக்கொண்டு காலட்சேபம் செய்துவந்த ஜாமணி சென்னையில் வருஷத்துக்கு மூன்று வீடு வீதம் மாற்றிக் கொண்டு வந்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஒரு இடத்தைவிட்டு மற்றொரு இடத்துக்குக் குடி கிளம்பினால், மூன்று மாத வாடகை பாக்கி, இரண்டு மாதம் பால் வாங்கிய பாக்கி, ஒரு மாதம் காய்கறி வாங்கிய பாக்கி என்று பற்பல பாக்கிகளை அப்படி அப்படியே அந்தரத்தில் நிறுத்திவிட்டு நகர்ந்து விடுவார். புது வீட்டுக்குக் குடி போவது, பாக்கி கேட்பவர்கள் இல்லாத ஒரு இன்பலோகத்துக்குக் குடிபோவது போலவே இருக்கும்.

இப்போது ஜாமணி ஆழ்வார்பேட்டையில் உள்ள ஒரு சந்துக்கு, ஒரு "இன்பலோகத்"துக்குக் குடிவந்திருக்கிறார். இவர் தப்பித்து வெளியேறிய "நரகலோகம்" பெரம்பூரில் ஒரு சந்தில் இருக்கிறது. ஆழ்வார்பேட்டையும் சில மாதங்களுக்குள் நரகமாகி விட்டால், அப்புறம் சென்னை மாநகரில் இன்பலோகம் உள்ள பகுதி வேப்பேரி ஒன்றுதான்! மற்றப் பகுதிகளையெல்லாம் ஜாமணி ஏற்கெனவே குடியிருந்து நரகங்களாக்கிவிட்டார். வேப்பேரிக்கு அப்புறம்...? அதைப்பற்றிக் கவலைப்படுவானேன்? சென்னையில் தான் மாதத்துக்கு ஒரு புதிய பேட்டை தோன்றிக் கொண்டிருக் கிறதே...

ஆழ்வார் பேட்டை வாசம் அவருக்குச் சொர்க்க வாசமாகவே

இருந்தது. எந்தத் தெருவிலும் பட்டப்பகலில் தாராளமாக நடமாடலாம். தொடர்ந்தாற்போல் ஒரு மாதம் ரொக்க வாடிக்கை வைத்துக் கொண்டால் எந்தக் கடைக்காரனும் கடனுக்குச் சரக்கு கொடுப்பான். பால்காரனும் கடனுக்குப் பால்விடுவான். வேறு என்ன வேண்டும்?

ஜாமணி இந்தப் புதிய இடத்துக்குக் குடிவந்து பத்துப் பன்னிரண்டு நாட்கள் கழிவதற்குள்ளாகவே, ஒரு கடிதமும் ஒரு புத்தகமும் அவருடைய பழைய பெரம்பூர் விலாசத்துக்குப் போய் அங்கிருந்து இங்கு வந்து சேர்ந்தன. அவர் தமது விலாசத்தைப் பெரம்பூர் போஸ்ட்மாஸ்டருக்கு மட்டும் தெரிவித்து விட்டு வந்திருந்தார்.

அந்தக் கடிதமும் புத்தகமும் "கலைக்கனி" காரியாலயத்திலிருந்து வந்தவை. புத்தகத்துக்கு விரிவான முறையில் ஒரு மதிப்புரை எழுதிக் கூடிய சீக்கிரம் அனுப்பி வைக்குமாறு கடிதத்தில் கோரப்பட்டிருக் கிறது. புக்போஸ்டை உடைத்துப் பார்த்தார். "குமாரி கோமளா" என்ற ஆறு ரூபாய் நாவல்; "நாட்டுத் தொண்டன்" பத்திரிகையின் உதவி ஆசிரியர் எம்.சி.சேகர் எழுதியது. இதை ஜாமணி பார்த்தாரோ இல்லையோ, "பயல் வந்து சிக்கினானே?" என்று ஒரே மகிழ்ச்சிப் பெருக்குடன் சொல்லிக் கொண்டார். சொல்ல முடியாத ஆனந்தக் களிப்பு. 'பிய்த்து வாங்கிவிடுகிறேன்' என்று சொல்லிக் கொண்டே புத்தகத்தை உள்ளே கொண்டுபோய் வைத்து விட்டு அழுகிற குழந்தையைச் சமாதானப்படுத்துவதற்காக அதன் அருகில் சென்றார்.

"குமாரி கோமளா" வை வரி விடாமல் படித்து முடித்தார் ஜாமணி படிப்பதற்கு முன்பே, எப்படியெல்லாம் மதிப்புரை எழுதவேண்டுமென்று திட்டமிட்டிருந்தாரோ அப்படியே எழுதி முடித்தார். அதன் கடைசிப் பகுதி பின் வருமாறு அமைந்திருந்தது:

"...இந்த ஆசிரியர் இதையும் நாவல் என்று எழுதியதற்கு பதிலாக வேறு ஏதாவது செய்திருக்கலாம். செய்வதற்கு வேலைகளா இல்லை? மோகினியாட்டம் ஆடலாம், கழைக் கூத்து ஆடலாம், வேசையர்பால் தூது சென்று பிழைக்கலாம் என்றெல்லாம் அந்தக் காலத்துப் புலவன் பட்டியல் அடுக்கியிருப்பது இந்த ஆசிரியருக்கு ஏனோ தெரியாமல் போய்விட்டது. அதற்காக நம் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்."

இதைப் படித்துப் பார்த்த ஜாமணியின் மனைவி, "என்ன இழவுக்கு இப்படிப் போட்டுத் தாக்கி எழுதவேண்டும்?" என்று கேட்டாள்.

"அப்புறம் என்ன? ஆனானப்பட்ட எழுத்தாளனெல்லாம் அன்னக்காவடி எடுக்கும்போது, இந்தப் பயலுக்கு மாதம் நானூற்றைம்பது ரூபாய் சம்பளம்! இவன் தொடர்கதையைப் படிக்கப் பல்லாயிரக்கணக்கில் முட்டாள் வாசகர்கள்!..."

மனைவி மேற்கொண்டு அங்கே நிற்கவில்லை. அவருடைய கருத்தைத் தன்னால் மாற்ற முடியாது என்பது அவளுக்குத் தெரியும். மாற்றக்கூடாது என்பதும் அவளுக்குத் தெரியும். ஏனென்றால் இப்படிப்பட்ட தாக்குதல் மதிப்புரைகளால்தான் கணவன் இன்னும் செலாவணியாகிக் கொண்டிருக்கிறான் என்பதையும், இல்லையென்றால் எப்பொழுதோ செல்லாக்காசு ஆகியிருப்பான் என்பதையும் அவள் நன்றாக அறிந்திருந்தாள்.

ஜாமணியின் மதிப்புரை தயாராகிவிட்டது. தபால் செலவுக்குக் காசு கிடைக்கும் தினத்தில் அனுப்பிவிடலாம். கவரில் வைத்து ஒட்டி விலாசமும் எழுதியாகிவிட்டது.

ஜாமணி ஆழ்வார்பேட்டைக்கு வந்து இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன. ஒரு நாள் காலையில் முதல் முதலாக ஒரு பலசரக்குக்

கடைக்குப் போய், ஐந்து ரூபாய் கடன் சொல்லி சரக்குகள் வாங்கிக் கொண்டு வந்துவிட்டார். கோட்டையைப் பிடித்ததுபோன்ற வெற்றிப் பெருமிதத்துடன் மனைவியிடம் வந்து, "முன்பின் தெரியாதவனாக இருந்தும் நம்மை நம்பி ஐந்து ரூபாய்க்குக் கடன் கொடுத்திருக்கிறான். இந்தப் பட்டணத்தில் இப்படிப்பட்ட நல்ல ஆத்மாக்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்!" என்று சொன்னார்.

மனைவிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. 'முன்பின் தெரிந்தவனாக இருந்தால் ஐந்து நயா பைசா கூடக் கடன் கொடுத்திருக்க மாட்டான்' என்பதுதான் சிரிப்புக்குக் காரணம் என்பதைச் சொல்ல வேண்டிய தில்லை.

அன்றைய தினம் நல்லவிதமாகவே விடிந்தது. ஆனால் நல்லவிதமாக அஸ்தமிக்கவில்லை.

சாயங்காலம் எங்கோ போய்விட்டுத் தெரு வழியாக வந்த ஜாமணியை ஏதோ ஒரு வீட்டுத் திண்ணையிலிருந்து வந்த ஒரு குரல் இடியைப் போல் முழங்கித் தடுத்து நிறுத்தியது. குரலின் வேகத்தைப் போட்டி போட்டுக் கொண்டு ஒரு ஆசாமி திண்ணையை விட்டுக் குதித்து அதிவேகமாக ஓடி வந்து ஜாமணிக்கு எதிரே நின்றான்.

"நாயனா, வந்து மாட்டினியா?" என்று ஒரு விதமாக நீட்டினான்.

அவன் வேறு யாருமல்ல; பெரம்பூர்ப் பால்காரன்தான். ஆழ்வார்ப் பேட்டையில் தன் உறவினர் ஒருவர் இறந்ததற்குத் துக்கம் விசாரிக்க வந்தவன், ஜாமணியையும் சேர்த்து 'விசாரிக்க' ஆரம்பித்து விட்டான்.

ஜாமணியின் சப்தநாடிகளும் ஒடுங்கிவிட்டன. பேச்சுச் சுதந்திரத்திற்காக, எழுத்துச் சுதந்திரத்திற்காக, அபிப்பிராய

சுதந்திரத்திற்காகக் காலமெல்லாம் போராடிய அந்தச் சுதந்திர புருஷர், பாவம், மூச்சுவிடும் சுதந்திரத்திற்கே போராடிக்கொண்டு, திக்பிரமை பிடித்தவர் போல் நடுத்தெருவில் நாதியற்று நின்றார்.

அப்போது பால்காரன் சொற்களால் தாக்கியது "குமாரி கோமளா"வுக்கு ஜாமணி எழுதிய மதிப்புரையை ஒரே நிமிஷத்தில் தூக்கிச் சாப்பிட்டுவிட்டது.

திண்ணையில் குந்தியிருந்த வேறு சிலரும் தெருவுக்கு வந்து ஒன்றும் புரியாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றார்கள். அந்த வழியாகப் போவோர், வருவோர், இரண்டு பக்கத்து வீடுகளிலும் குடியிருப்போர், காலையில் ஐந்து ரூபாய்க்குக் கடன் கொடுத்த பலசரக்குக் கடைக்காரன் - இத்தனை பேரும் வந்து கூடிவிட்டார்கள். பட்டாணி சுண்டலும், சோடா கிரஷும் விற்பவர்கள் வராத குறைதான்.

தெருப் பிடிக்காத அந்தக் கூட்டத்தின் மத்தியில் ஜாமணி கற்சிலை போல் அசைவற்று நிற்க, பால்காரன் தமிழ்ச் சொற்களாலும், திசைச் சொற்களாலும், வழக்குச் சொற்களாலும், இன்னும் வாய்க்கு வந்த வெவ்வேறு சொற்களாலும் லக்ஷார்ச்சனை செய்து கொண்டிருந்தான். அவனுடைய வாய்மொழியின் மூலம் ஜாமணியின் பூர்வாசிரமத்தைப் பற்றிய சில செய்திகள் பலசரக்குக் கடைக்காரனின் காதில் கனல் நுழைந்தது போல் புகுந்தன. 'எந்த ஜன்மத்தில் எவன் சொத்தை மோசம் பண்ணினோமோ, இன்று விடிந்ததும் விடியாததுமாக இந்தப் படுபாவிக்கு ஐந்து ரூபாய் சரக்குகளைத் தூக்கிக் கொடுக்கும்படி ஆய்விட்டது' என்று தன் தலைவிதியை நொந்துகொண்டு கடைக்குப் போய்ச் சேர்ந்தான்.

அப்போது ஆபீஸ் வேலை முடிந்து வந்துகொண்டிருந்த எம்.சி.சேகர் "குமாரி கோமாளா"வின் ஆசிரியர் - தம்முடைய

தெருவில் என்றுமில்லாதவாறு கூட்டம் கூடியிருப்பதைப் பார்த்துத் திகைத்த வராய் அருகில் நெருங்கி வந்தார். வந்தவர் நடுநாயகமாய் நிற்கும் ஜாமணியைப் பார்த்தார்; ஜாமணியும் அவரைப் பார்த்தார். இந்த இரண்டு பேரையும் பால்காரன் மாறி மாறிப் பார்த்தான். 'பரிச்சயமானவர்கள் போலிருக்கிறது; தெரிந்தவர்கள் முன்னிலை யில் அவமானப்படுத்தினால்தான் ஏதாவது பிரயோஜனம் உண்டு' என்று முடிவு கட்டி, ஏற்கெனவே செய்த அர்ச்சனைகளை மீண்டும் அடியிலிருந்து ஆரம்பித்தான்.

"என்ன, என்ன விஷயம்?" என்று கேட்டார் சேகர்.

பால்காரன், "ஸார், நீ கேளு ஸார்..." என்று ஆரம்பித்து, பெரம்பூர் வட்டாரத்தில் ஜாமணி குடியிருந்த போது தன்னிடம் முப்பத்தாறு ரூபாய்க்குப் பால் வாங்கி விட்டுப் பணம் கொடுக்காமல் தலைமறைவாகி விட்டதையும், அங்குள்ள பல கடைக்காரர் களுக்கும், அண்டை அயல் வீட்டுக்காரர்களுக்கும், வாடகைக்குக் குடியிருந்த வீட்டுச் சொந்தக்காரனுக்கும், பட்டை நாமம் போட்டு விட்டுக் கம்பி நீட்டியதையும், அத்தனை பேரும் அங்கே தலையில் கையை வைத்துக் கொண்டிருப்பதையும் விஸ்தாரமாக எடுத்துச் சொன்னது, 'மைக்' இல்லாமலே கூட்டத்தில் அத்தனை பேருக்கும் அக்ஷர சுத்தமாகக் கேட்டது.

"உன் பாக்கி எவ்வளவு?" என்று சுருக்கமாகக் கேட்டார் சேகர். "அதுதான் சொன்னேனே, முப்பத்தாறு ரூபாய்; வீட்டு வாசலில் மாடுபோட்டுக் கறந்து பால் விட்ட பாக்கி முழுசா முப்பத்தாறு ரூபாய்!" என்றான்.

"முப்பத்தாறுதானே? இந்தா பிடி; பேச்சை நிறுத்து" என்று சொல்லிவிட்டுத் தம் சட்டைப் பையிலிருந்து நான்கு பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்துக் கொடுத்தார் சேகர்.

பால்காரன் முப்பத்தாறு போக பாக்கி நான்கு ரூபாயைத் தட்சணமே அவரிடம் கொடுத்தான். ஜாமணி விடுதலையானார். அவர் அடி எடுத்து வைத்து நடக்கும் போது, பால்காரன் அவரை உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்து, ஒரு தினுசாகச் செருமிக் கொண்டே வீட்டுத் திண்ணையை நோக்கி நடந்தான். கூட்டம் கலையத் தொடங்கியது. பணத்தைக் கொடுத்த சேகர் ஒரு நிமிடம்கூட அங்கே நிற்காமல் தம் வீட்டைப் பார்த்துப் போய்விட்டார். அந்த ரசக்குறைவான கட்டத்தில் ஜாமணியுடன் நின்று பேச அவர் விரும்பவில்லை. ஜாமணியும் நடையைக் கட்டினார்.

அவருக்காக வேறு யாரோ ஒருவர் பணம் கொடுத்து உதவத் தயாராக இருக்கிறார் என்று அன்றிரவு பலசரக்குக் கடைக்காரன் கேள்விப்பட்டான். அப்போது அவனுக்குக் கொஞ்சம் நம்பிக்கை பிறந்தது; உயிரும் வந்தது.

வீட்டுக்குப் போன ஜாமணி சாப்பிட்டுவிட்டுத் தாம் முன்பு எழுதி வைத்திருந்த மதிப்புரையை எடுத்துத் திரும்பவும் ஒரு முறை படித்துப் பார்த்தார். கொஞ்சம் சங்கடமாக இருந்தது. இருந்தாலும், "கேவலம், இவனுடைய முப்பதாறு ரூபாய்க்கு என் அபிப்பிராயத்தை விற்பதா? இலக்கியம் வேறு; வாழ்க்கை வேறு' என்று தமக்குள்ளேயே சொல்லிக் கொண்டு படுத்தார். மறுநாள் ஞாபகமாகத் தபாலாபீசுக்குப் போய் மதிப்புரையை ஸ்டாம்பு ஒட்டிப் போட்டுவிட்டுத் திரும்பினார்.

அடுத்த வாரமே"கலைக்கனி" பத்திரிகையில் "குமாரி கோமளா"வுக்கு ஜாமணி எழுதிய மதிப்புரை வெளியாயிற்று. ஆசிரியர் ஒரு எழுத்தைக்கூட எடுக்காமல் சிற்சில இடங்களில் கொட்டை எழுத்துக்களையும் பிரயோகித்துப் பிரசுரித்திருந்தார். அச்சில் படிக்கும் போது இன்னும் கொஞ்சம் 'எபெக்டி'வாக

இருக்கிறதென்று ஜாமணி சந்தோஷப்பட்டார். தம் நண்பர் குழாத்தின் பாராட்டுரைகளை அன்றிலிருந்து எதிர்பார்க்கத் தொடங்கினார்.

எம்.சி.சேகரும் தமது புத்தகத்துக்குக் "கலைக் கனி"யில் வெளிவந்த மதிப்புரையைப் படித்துப் பார்த்தார். அவருக்கு வந்த ஆத்திரத்தில், ஜாமணியை நடுரோட்டில் கொண்டு நிறுத்தி, அந்தப் பெரம்பூர்ப் பால்காரனையே போய் அழைத்துக் கொண்டு வந்து, அவன் கையில் இன்னொரு முப்பத்தாறு ரூபாயைக் கொடுத்து வாய் வரிசையைக் காட்டச் சொன்னால் என்ன என்று இருந்தது. ஜாமணியின் உண்மையான வார்த்தைகளை வெல்லும் சொற்கள் அந்தப் பால்காரன் ஒருவனிடம் தான் இருந்தன. ஜாமணியை எப்படிப் பழி வாங்குவது என்று தெரியாமல் சேகர் மனம் குமுறிக் கொண்டிருந்த சமயத்தில், எரிகிற தீயில் எண்ணெயை வார்த்தது போல, ஜாமணிக்கு ஐந்து ரூபாய்ச் சரக்குகளைக் கடனாகக் கொடுத்த கடைக்காரன் ஒருநாள் சேகரின். ஆபீசை விசாரித்துத் தெரிந்து கொண்டு அங்கே போய், அந்தப் பால்காரனுக்கு முப்பத்தாறு ரூபாயைக் கொடுத்ததுபோலத் தனக்கும் தயவுபண்ணி அந்த ஐந்து ரூபாயைக் கொடுக்க வேண்டுமென்று சேகரை வினயமாகக் கேட்டுக்கொண்டான்.

இதைக் கேட்டாரோ, இல்லையோ சேகர் தமது கோபத்தை யெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு கடைக்காரன் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். "போ வெளியே" என்று அவர் கத்தியது ஆபீசையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. கடைக்காரனால் அவமானத்தைத் தாங்க முடியவில்லை. ஆத்திரம் தீர ஜாமணியை ஒரு அடியாவது அடித்துவிட்டுத்தான் மறுவேலை என்று விரதம் வைத்துக் கொண்டு ஆழ்வார்பேட்டைக்கு ஓடோடி வந்தான். அதே சமயத்தில் ஜாமணியின் வீட்டிலிருந்து ஒரு மூல்தானிய

லேவாதேவிக்காரன் பிரம்பைச் சுழற்றிக்கொண்டே வெளியே வருவதைப் பார்த்து, "ஜாமணி இருக்கிறாரா?" என்று கடைக்காரன் கேட்டான்.

அந்த மூல்தானியன் கொஞ்சம் தமாஷ் பேர்வழி. அதனால் தன் கடன் வசூலாகாத துக்கத்தையும் பொருட்படுத்தாமல் சிலேடையாகப் பேச ஆரம்பித்துவிட்டான்!

"ஜாமணி, 'ஜாவ் மணி'யாயிட்டார். எங்கே ஜாவ் பண்ணினாரோ, அவர் .மனைவிக்கே தெரியவில்லை!" என்று சொல்லிவிட்டுச் சிரித்தான்.

'இதில் சிரிப்பு என்ன வேண்டிக் கிடக்கிறது!' என்று அவனை மனசுக்குள்ளேயே கடிந்துகொண்டு கடைக்குத் திரும்பினான் கடைக்காரன்.

கடைசியில் ஆழ்வார்பேட்டையும் ஜாமணிக்கு நரகமாகி விட்டது. அதற்கு அடையாளமாக, தெருக்களில் பகல் நடமாட்டம் நின்றுவிட்டது. வேப்பேரியில் வீடு தேடிக்கொண்டிருப்பதாகத் தம் மனைவியிடம் ஒருநாள் சொன்னார். வேப்பேரி அவருக்கும் அவர் மனைவிக்கும் நன்னம்பிக்கை முனையாக இருந்தது.

ஒரு நாள் இரவு ஏழு ஏழரை மணியிருக்கும். எம்.சி.சேகர் தம் வீட்டில் உட்கார்ந்து ஏதோ எழுத்து வேலையில் ஈடுபட்டிருந்தார். அப்போது நம்ப முடியாத ஒரு அதிசயம் நடந்தது. சேகரால் ஐந்து நிமிஷம் வரை தம் கண்களையே நம்ப முடியவில்லை. அவருடைய கையிலிருந்த பேனா தானாகவே பிடிப்பின்றி நழுவிக் கீழே 'டொக்' கென்று விழுந்தது. அப்பொழுதுகூட சேகருக்குச் சுய உணர்வு வரவில்லை. திறந்தவாய் மூடாமல், பார்த்த கண்கள் பார்த்தபடியே உட்காாந்து போனார்.

“உள்ளே வரலாமோ?” என்று கேட்டுக்கொண்டே ஒரு அசட்டுப் புன்னகையோடு நெருங்கி வந்து கொண்டிருந்தார் ஜாமணி! சேகருக்கு பயமே உண்டாகிவிட்டது. எழுத்தாளர்களுக் கெல்லாம் சிம்ம சொப்பனம்; தம் வீட்டுக்கு இதற்கு முன் என்றுமே வந்திராத ஆள்; அதிலும், செய்த நன்றியை மறந்து, பொறாமையின் காரணமாகவே கேவலமான பாஷையில் தாக்கி மதிப்புரை எழுதிவிட்டு, எழுதிய புதிதிலேயே தம் வீட்டுக்குள் கொஞ்சம்கூட அச்சம் தயக்கமில்லாமல் வருகிறார். இப்படிப்பட்ட எமகாதகனுக்கு பயப்படாமல் என்ன செய்வது?

“ஒரு முக்கியமான காரியமாக வந்திருக்கிறேன். ரொம்ப நேரம் பேசி உங்கள் வேலையைக் கெடுக்க நான் விரும்பவில்லை. சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன்...”

“? ? ?”

“எனக்கு ஒரு இருபத்தைந்து ரூபாய் வேண்டும். அவசரத் தேவை!”

“? ? ? ?-சேகர் அதிர்ச்சியடைந்து நாற்காலியில் சாய்ந்தார். மறுகணமே அதிர்ச்சி நீங்கி ஆயிரம் யானை பலத்தோடு நிமிர்ந்து உட்கார்ந்தார்.

“கடன் கேட்க வந்து விட்டால், எப்பேர்ப்பட்ட மகா வீரனையும் உள்ளங்கையில் வைத்து ஊதிவிடலாம்’ என்று துணிந்து, “எதற்கு இருபத்தைந்து ரூபாய்? உம்முடைய நன்றி யுணர்ச்சிக்கா? இல்லை. நீர் செய்யும் இலக்கிய சேவைக்கா? ஒன்றும் புரியவில்லையே!” என்று பற்களைக் கடித்துக் கொண்டு கேட்டார் சேகர்.

“இலக்கியச் சேவையாவது, மண்ணாங்கட்டியாவது! வேறு

இடத்துக்குக் குடிபோகிறேன். செலவுக்குக் கொஞ்சம் பணம் தேவையாக இருக்கிறது. அவ்வளவு தான்.”

“நீர் இப்படி நடுச்சாமத்தில் குடி கிளம்பிப் போவதற்கு ஒத்தாசை செய்து, ஆழ்வார்பேட்டையிலுள்ள அத்தனை வியாபாரிகளின் சாபத்தையும் ஏற்றுக்கொள்ள நான் தயாராக இல்லை. நீர் சுயேச்சை எழுத்தாளர்; யாருக்கும் எந்த விதிக்கும் கட்டுப்படாத சுதந்திர புருஷர். நானோ அடிமை; அபிப்பிராய சுதந்திரத்தை அடகு வைத்து வயிற்றைக் கழுவுகிறவன். உம்முடைய சுதந்திரத்தைக் காப்பாற்ற என் அடிமைத்தனத்திடம் நீர் யாசகம் கேட்க வரலாமா? இது உமக்கே அவமானமாக இல்லையா?”

“ஆபீசில் வேலை பார்ப்பது அடிமைத்தனமா? அப்படி நான் எப்பொழுது சொன்னேன்?”

“அடிமைத்தனம் அல்ல என்றால் நீர் எதற்கு இத்தனை ஆபீஸ்களை விட்டு வெளியே வந்தீர்?”

“அபிப்பிராய சுதந்திரமில்லாத இடத்தில் யார்தான் வேலை செய்வார்கள்?”

“அப்படி என்ன அபூர்வமான அபிப்பிராயத்தை எழுதி விட்டீர்கள்? அதை அவர்கள் தடுத்துவிட்டார்கள்? ஆபீசை விட்டு வெளியே வந்து சுயேச்சையாக மாறிய பிறகும்தான் எத்தனை அபிப்பிராயங்களைச் சுதந்திரமாக வெளியிட்டு விட்டீர்கள்?”

இவ்வளவு துணிச்சலாக சேகர் எதிர்த்துப் பேசுவார் என்று ஜாமணி எதிர்பார்க்கவே இல்லை. பதில் பேச நா எழும்பாமல் மூச்சுப் பேச்சற்று உட்கார்ந்திருந்த ஜாமணி மீது சேகர் எகிறி எகிறிப் பாய்ந்தார்.

“உலகத்துக்கு உபயோகமான அபிப்பிராயங்களை வைத்துக்

கொண்டிருப்பவன், அபிப்பிராய சுதந்திரம் என்று சொன்னால் அதற்கு அர்த்தம் உண்டு. உமக்கும் எனக்கும் எதற்கு அந்த ஆசை? அவர்களோடு சேர்ந்து நீரும் நானும் 'கோவிந்தா' போடுவது எதற்காக? எண்ணெய்க் குடம் போட்டவனும் ஐயோ ஐயோ, தண்ணீர்க் குடம் போட்டவனும் ஐயோ ஐயோவா?"

"அபிப்பிராயம் இல்லாமலா ஒவ்வொரு ஆபிசிலும் போராடியிருப்பேன்? வேலையையும் விட்டிருப்பேன்?"

"அதுதான் ஐயா, முயலுக்கு மூன்று கால் என்பதும் உமக்கு ஒரு அபிப்பிராயம். நன்றாகப் பிழைப்பவனைப் பார்த்துப் பொறாமைப் படுவதும் ஒரு அபிப்பிராயம். ஆனால் புத்தியுள்ளவன் இதையெல்லாம் ஏற்றுக் கொள்ள வேண்டுமே?"

"ஏற்றுக் கொள்ளாததைப் பற்றி நான் கவலைப்படவில்லை. உம்மைப் போல் மாடி வீட்டில் குடியிருக்க ஆசைப்பட்டால் அல்லவா நான் அதற்கெல்லாம் கவலைப்பட வேண்டும்! கேவலம், மாதச் சம்பளத்துக்கு சுதந்திரத்தை ஏன் அடகு வைக்க வேண்டும்?"

"மாதச் சம்பளம் வாங்காமலே சுதந்திரத்தை அடகு வைக்கிறீரே, அதற்கு என்ன சொல்லுகிறீர்? பொறாமை, பெரிய நினைப்பு, தத்தாரித்தனம், தடித்தனம் போன்ற ஏதாவது ஒரு ஆகாத குணத்தை அபிப்பிராயம், சுதந்திரம் என்று நினைத்துக்கொண்டு, அதன்பொருட்டு குடியிருக்கும் தெருவில் நடமாட்ட சுதந்திரத்யையே இழக்கிறீர். நாங்கள் முதலாளியின் இ டப்படி எழுதுவதாக ஊருக்குள் போய்ப் பிரச்சாரம் செய்கிறீர். உண்மை தான். முதலாளியின் இஷ்டத்துக்குத்தான் எழுதுகிறோம். பேச்சுச் சுதந்திரம், அபிப்பிராய சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம் முதலியவை இருக்க வேண்டுமென்று நாங்கள் எழுதுவதுகூட முதலாளியின் அபிப்பிராயம் தான் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் நீர்

என்ன செய்கிறீர்? ஒரு பிரசுராலய முதலாளி முப்பது ரூபாய் முன் பணம் கொடுத்தால் உம் துறைக்குச் சம்பந்தமில்லாத வேலைகளை யெல்லாம் அவர் சொன்னபடி செய்து கொடுக்கத் தயாராக இருக்கிறீரே! பெர்னாட்ஷாவைத் திருடுவதிலிருந்து பிஸ்கட் செய்யும் முறையை எழுதிக் கொடுப்பது வரை நீர் எதைத்தான் செய்யவில்லை? நாங்கள் முந்நூற்றைம்பது ரூபாய்க்கு அபிப்பிராய சுதந்திரத்தை விற்கிறோம். நீர் முப்பது ரூபாய்க்கு விற்கிறீர்! இதில் எது புத்திசாலித்தனம்! எது முட்டாள் தனம்! நமக்கு அபிப்பிராயம் என்று உருப்படியாக ஏதாவது இருக்கிறதா என்பதை அப்புறம் பார்த்துக் கொள்ளுவோம். முதலில் இதைச் சொல்லும்...''

ஜாமணியால் அங்கே உட்கார்ந்திருக்கவே முடியவில்லை. விருட்டென்று கோபமாக எழுந்தார். "எனக்கு இருபத்தைந்து ரூபாய் தேவை. கொடுக்க முடியுமா, முடியாதா? இரண்டில் ஒன்றைச் சொல்லுங்கள். இனியும் நான் பிரசங்கம் கேட்கத் தயாராக இல்லை'' என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பேசினார்.

"உமக்கு நான் பணம் கொடுக்கத் தயாராக இல்லை-நீர் 'குமாரி கோமளா'வுக்கு இன்னொரு மதிப்புரை எழுதினாலும் சரி, புறப்படும்!'' என்று விடை கொடுத்தார் சேகர்.

ஜாமணி வெளியே போய்விட்டார்.

